egistered No. M. 2330

'SIDDHANTHAM'
Vol. 32—No. 10



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 32 | விகாரி ஐப்பசி 1959 அக்டோபர் | இதழ் 10

உள்ளுறை



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 — தனிப்பிரதி அணா 4

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின்

# சமய வெளியீடுகள்

| | ரு.ந.பை |
|---|---|
| திருமந்திரம்—2 பகுதிகள் —சித்தாந்த பண்டிதர், ப. இராமநாத பிள்ளை அவர்கள் விளக்க உரையுடன் | 18-00 |
| அகத்தியர் தேவாரத் திரட்டு —கபப்பாக்கம்-சதாசிவச் செட்டியார் உரை | 3-50 |
| சிவஞானபோதச் சிற்றுரையும் விளக்கமும் —ப. இராமநாத பிள்ளை | 5-00 |
| சிவஞானபாடியம் —உயர்ந்த பதிப்பு | 5-00 |
| திருவிளையாடற்புராணம் —மதுரைக் காண்டம், நாட்டார் உரையுடன் | 9-00 |
| பெரியபுராணம் —சுந்தரர் வரலாறு | 3-50 |
| பெரியபுராணம் —திருநாவுக்கரசர் வரலாறு | 3-25 |
| சிவஞானபோதப் பொழிப்புரை —கா. சுப்பிரமணிய பிள்ளை | 0-75 |
| திருவாசக விரிவுரை —மறைமலையடிகள் | 6-00 |
| சோமசுந்தர நாயகர் வரலாறு —மறைமலையடிகள் | 2-25 |
| மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் —மறைமலையடிகள் | 18-00 |

| | ரு.ந.பை |
|---|---|
| தேவார ஒளிநெறிக் கட்டுரை —அப்பர் | 4-50 |
| —சம்பந்தர் | 5-00 |
| தணிகைமணி, வ. சு. செங்கல்வராய பிள்ளை | |
| திருவிளையாடல் வசனம் | 4-00 |
| கந்தபுராண வசனம்—சு. அ. இராமசாமிப்புலவர் | 5-00 |
| கம்பராமாயண வசனம் —சு. அ. இராமசாமிப் புலவர் (இருபகுதிகள்) | 10-00 |
| வில்லிபாரத வசனம் | 5-00 |
| சீவகசிந்தாமணி வசனம் | 6-25 |
| சிவன் —ந. சி. கந்தையா | 1-00 |
| தமிழர் சமயம் —கா. சுப்பிரமணிய பிள்ளை | 2-00 |
| சிவஞானசித்தியார் ஆராய்ச்சி —ந. சிவகுருநாத பிள்ளை | 1-75 |
| பிள்ளைத்தமிழ் கொத்து | 5-00 |
| மணிவாசகப்பெருமான் வரலாறு | 1-75 |
| சுந்தரமூர்த்தி சுவாமிகள் வரலாறு | 2-25 |
| அப்பர் சுவாமிகள் வரலாறு | 1-75 |
| சேக்கிழார் சுவாமிகள் வரலாறு | 1-50 |
| தாயுமான சுவாமிகள் வரலாறு | 2-25 |

விரிவான பட்டியலுக்கு எழுதுங்கள் :

**திருநெல்வேலித் தென்னிந்திய**

**சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,**

***1/140, பிராட்வே, சென்னை-1***

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவர்
ஞானகுரு வாளியைஉள் நாடு


| மலர் 32 | விகாரி ஐப்பசி 1959 அக்டோபர் | இதழ் 10 |
|---|---|---|


## அளவை இயல்

(முருகவேள்)

### உவமைப் போலிகள் 18

உவமைப் போலியாவது உவமைக்கு உரிய இலக்கணம் அமையாமல், உவமைபோலத் தோன்றும்படி வருவது. இதனை வடமொழியில் "திருஷ்டாந் தாபாசம்" என்பர். திருஷ்டாந்தம் - எடுத்துக்காட்டு, உவமை. ஆபாசம் - போலி. துணி பொருளும் ஏதுவும் தம்முள் நீக்கமின்மை (வியாத்தி) உடையன என்பது, துணிதற்கு இடனாதல், உவமைக்குரிய இலக்கணம் ஆகும்.

"இம்மலை நெருப்புடையது,
புகையுடைமையால்,
அடுக்களை போல"

என்புழி, அடுக்களை என்னும் உவமையானது, துணிபொருளாகிய நெருப்பும் ஏதுவாகிய புகையும் தம்முள் நீக்கமின்மை உடையன என்று துணிதற்கு இடனாகத் திகழ்கின்றது. இங்ஙனம் இன்றி,

"புகை திட்பமுடையது,
உருவமுடைமையால்,
காற்றுப்போல"

என்புழி, காற்று என்னும் உவமையானது, திட்பமும்

உருவமும் உடையதன்றாய், துணிபொருளாகிய நிட்பமும் ஏதுவாகிய உருவமும் தம்முள் நீக்கமின்றி நிற்பன எனத் துணிதற்கு இடனாகாமல், புரைபடுகின்றது. இன்னோரன் னவையே " உவமைப் போலிகள் " எனப்படும்.

உவமையும் உவமைப் போலியும், உடன்பாடு (அந்நு வயம்) எதிர்மறை (வெதிரேகம்) என இருதிறப்பட்டுவரும். இவற்றை முறையே சாதன்மியம் எனவும் வைதன்மியம் என வும் கூறுவதுண்டு. சாதன்மிய திருட்டாந்தம் என்னும் உடன்பாட்டுவமையானது யாவராலும் நன்கினிது தெளி யப்பட்டதாக இருத்தல் வேண்டும். அன்றியும், அதன்கண் துணிபொருள் (சாத்தியம்) ஏது (சாதனம்) ஆகிய இரண் டும் ஐயத்திற்கு இடனின்றித் தெளிவுற வெளிப்பட்டிருத் தல் வேண்டும். மேலும், துணிபொருட்கும் ஏதுவிற்கும் இடையேயுள்ள தொடர்பை உணர்த்தும் " அந்நுவய வியாத்தி வசனம் " (யாது யாது புகையுடையது அது அது நெருப்புடையது என்றாற் போல்வது) முறை பிறழாமல் செவ்விதிற் கிளந்து கூறப்பட்டிருத்தல் வேண்டும். இம் மூன்றுவகை இலக்கணங்களும் இனிது அமையக் கூறப் பெறுவது " சாதன்மிய திருட்டாந்தம் " அல்லது உடன் பாட்டுவமையாகும். இவ்வகை இலக்கணங்கள் அமையா மல் பிழைபடக் கூறப்பெறுவன " சாதன்மிய திருட்டாந்தா பாசம் " அல்லது " உடன்பாட்டுவமைப் போலி " எனப் பெயர் பெறும்.

இங்ஙனமே, இதற்கு மறுதலையாகிய " வைதன்மிய திருட்டாந்தம் " என்னும் எதிர்மறை உவமையானது, மாற்றானாலும் மற்றையோராலும் நன்கினிது தெளியப் பட்டதாய், ஏதுவும் துணிபொருளும் ஆகிய இரண்டும் தன் கண் இல்லாமல் இருப்பதாய், " வெதிரேக வியாத்தி வசனம் " (எது எது புகையிலது அது அது நெருப்பிலது என்றாற் போல்வது) முறை பிறழாமல் கூறப்பெற்றதாய் அமைதல் வேண்டும். வைதன்மிய திருட்டாந்தத்துக்குரிய இவ்விலக் கணங்கள் இன்றிப் பிறழ்ந்து பிழைபட வருவன " வைதன் மிய திருட்டாந்தாபாசம் " அல்லது " எதிர்மறை உவமைப் போலி " எனப்படும்.

இவ்வுவமைப் போலியானது உடன்பாடு (சாதன் மியம்) எதிர்மறை (வைதன்மியம்) என இருதிறப்பட்டு விரி

யான் ஒரோவொன்று ஒன்பதாய்ப் பதினெட்டு வகைப் படும். "உவமைப்போலி ஈரொன்பான் காண்டும்" என்பது அருள்நந்திசிவம் கூற்று. அப்பதினெட்டுவகை உவமைப் போலிகளையும் குறித்து ஈண்டுச் சிறிது இயன்ற பெற்றி காண்பாம் :

**1.** துணிபொருள் உடைத்தாகாதது : இதனைச் "சாத்திய விகலம்" என்பர். சாத்தியம்-துணிபொருள். விகலம்-உறுப்பற்றது, குறைவுடையது.

"ஒலிநிலைபேறுடையது,
அசரீரியாகலின்,
தொழில்போல"

என்புழி, உவமையாகிய 'தொழில்' என்பது துணிபொருளாகிய 'நிலைபேறு' உடையதாகாமல், உவமைத் தன்மையிற் குறைபாடுற்று உவமைப் போலியாயிற்று.

**2.** துணிபொருளுடைமை தெளியப்படாதது : இதனைச் "சந்திக்த சாத்தியம்" என்பர். சந்திக்தம்-சந்தேகத்திற் குரியது, தெளியப்படாதது.

"இம்மனிதன் அறியாமையுடையன்,
பேசுந்தன்மையன் ஆகலின்,
தெருவில் மனிதனைப் போல"

என்புழி, உவமையாகிய 'தெருவிற்செல்லும் மனிதன்' துணிபொருளாகிய 'அறியாமை' யுடையவனா? என்பது, ஏதுவினால் தெளியப்படாததாய் உவமைப் போலியாயிற்று.

**3.** ஏதுவுடைத்தாகாதது : இது "சாதன விகலம்" எனப்படும். சாதனம் - ஏது. விகலம் - குறைவுடையது, உடைத்தாகாதது. அஃதாவது, ஏதுத் தன்மை தன்கண் உள்ளதாக வெளிப்படையில்லாத பொருளை உவமை காட்டுதல்.

"மனம் நிலைபேறிலது,
சரீரியாகலின்,
தொழில்போல"

என்புழி, 'சரீரமுடைமை'யாகிய ஏதுவைத் 'தொழி'லாகிய

உவமையானது தன்கண் உடையதாகாமல் மறுதலைப்பட்டு உவமைப்போலியாயிற்று.

4. ஏதுவுடைமை தெளியப்படாதது: இது "சந்திக்த சாதனம்" எனப்படும். சந்திக்தம் - சந்தேகத்திற்குரியது, தெளியப்படாதது. சாதனம் - ஏது.

" இம்மனிதன் இறக்குந் தன்மையன்,
அறியாமையுடையனாகலின்,
தெருவில் மனிதனைப்போல "

என்புழி, 'அறியாமை யுடைமை'யாகிய ஏதுவானது, 'தெருவிற்செல்லும் மனிதன்' ஆகிய உவமையின்கண் அமைந்துள்ளதெனத் தெளியப்படாமையால், உவமைப் போலியாயிற்று.

5. இரண்டும் உடைத்தாகாதது: இதனை "உபய விகலம்" என்பர். உபயம் - இரண்டு, விகலம் - குறைவுடையது, உடைத்தாகாதது. அஃதாவது, துணிபொருளும் ஏதுவும் ஆகிய இரண்டும் உடையதாகாத உவமையுறுப்புக் கூறுதல்.

" மனம் நிலைபேறிலது,
சரீரியாகலின்,
வாயுப்போல "

என்புழி, 'நிலைபேறின்மை'யாகிய துணிபொருளும், 'சரீர முடைமை'யாகிய ஏதுவும் ஆகிய இரண்டையும், 'வாயு'வாகிய உவமை உடையதாகாமையால், உவமைப்போலியாயிற்று.

6. இரண்டும் உடைமை தெளியப்படாதது: இதனைச் "சந்திக்த உபய விகலம்" என்பர். அஃதாவது, துணிபொருளும் ஏதுவும் ஆகிய இரண்டும் தன்கண் உடையதாகத் தெளியப்படாத பொருளை உவமை காட்டுதல்.

" சாத்தன் முற்றறிவுடையனல்லன்,
விருப்பு வெறுப்புடையனாகலின்,
தெருவில் மனிதனைப்போல "

என்புழி, 'முற்றறிவுடையனல்லன்' என்னும் துணிபொருளும், 'விருப்பு வெறுப்புடையவன்' என்னும் ஏதுவுமாகிய

இரண்டும், 'தெருவிற்செல்லும் மனிதன்' ஆகிய உவமை யின்கண் உள்ளமை தெளியப்படாமையால், உவமைப் போலியாயிற்று.

7. சொருபம் இல்லது: இஃது "அநந்நுவயம்" என வழங்கப்பெறும். ஏதுவும் துணிபொருளும் என்னும் இரண்டற்கும் இடையேயுள்ள தொடர்பை யுணர்த்தும் "அந்நுவய வியாத்தி வசனம்" இன்றி உவமையுறுப்புக் கூறுவது, "அநந்நுவயம்" என்னும் உவமைப்போலியாகும்.

"கொற்றன் விருப்பு வெறுப்புடையன்,
பேசுகின்றவ னாகலின்,
சாத்தன்போல"

என்புழி, 'விருப்பு வெறுப்புடைமை'யாகிய துணிபொருளும், 'பேசுதல்' ஆகிய ஏதுவும் தம்முள் நீக்கமில்லாத தொடர்பு (அந்நுவய வியாத்தி) உடையன என்பது விளங்க,

"எவன்எவன் பேசுகின்றவன்
அவன்அவன் விருப்புடையவன்,
சாத்தன்போல"

என உவமை யுறுப்பு விரித்துரைக்கப் பெற்றிருத்தல் வேண்டும். அங்ஙனம் கூறப்பெறாமையால் "அநந்நுவயம்" என்னும் உவமைப்போலி யாயிற்று.

8. சொருபமுண்மை பிறனுக்கு உடம்பாடு ஆகாதது இதனை "அப்பிரதர்சி தாந்நுவயம்" என்பர்.

"ஒலி நிலைபே றிலது,
படைக்கப்படுதலின்,
குடம்போல"

என்புழி, குடமாகிய உவமையின்கண், படைக்கப் படுதலாகிய ஏதுவும், நிலைபேறின்மையாகிய துணிபொருளும் ஒன்றியுண்மை யுணரப்படுகின்ற தாயினும், "படைக்கப் படுவனயாவை அவையனைத்தும் நிலைபேறில்லன" என்று துணிவதற்குரிய உடனிகழ்ச்சித் தொடர்புண்மை (அந்நுவய வியாத்தி) குடமாகிய உவமையால் பிறனுக்கு உடம்பாடு ஆகும்படி,

"எதுவெது படைக்கப்படுவது
அதுவது நிலைபேறிலது,
குடம்போல"

என விரித்துரைத்து இனிது தெளிவுறுத்திக் காட்டப்பெற வில்லை யாதலின், இஃது "அப்பிரதர்சி தாந்நுவயம்" என்னும் உவமைப்போலியாயிற்று.

9. செயற்கையானுய உடனிகழ்ச்சி: இது "விபரீதாந்நுவயம்" எனக் கூறப்படும். அஃதாவது, உவமையுறுப்பாகிய சொற்றொடரினை முறைபிறழ்ந்து மாறுபடக் கூறுவது. விபரீதம் - மாறுபாடு.

"இம்மலை நெருப்புடையது,
புகையுடைமையால்,
யாதுயாது நெருப்புடையது
அதுவது புகையுடையது,
அடுக்களைபோல"

என்புழி, "யாதுயாது புகையுடையது அதுவது நெருப்புடையது அடுக்களை போல" எனக் கூறுதற்குரிய உவமையுறுப்புச் சொற்றொடரை, "யாதுயாது நெருப்புடையது அதுவது புகையுடையது" என முறை பிறழ்ந்து விபரீதமாகக் கூறியதனுல், இது "விபரீதாந்நுவயம்" என்னும் உவமைப்போலி யாயிற்று.

இதுகாறும் கூறிப்போந்தன ஒன்பதும், உடன்பாடு (அந்நுவயம்) பற்றிய உவமைப்போலிகளாகும். இனிக் கீழ்வருவன ஒன்பதும் எதிர்மறை (வெதிரேகம்) பற்றிய உவமைப்போலிகள் ஆகும். எதிர்மறையுவமைப் போலியாவது, துணிபொருளுக்கு இடமாகிய பக்கத்தினின்றும், அதற்கு எடுத்துக் காட்டாகிய சபக்கத்தினின்றும், வேறுபட்டு நிற்கற்பாலதாகிய விபக்கத்தன்மையிற் குன்றிப் பிழைபட வருவது.

"இம்மலை நெருப்புடையது,
புகையுடைமையால்,
எதுவெது புகையுடையது
அதுவது நெருப்புடையது,
அடுக்களை போல" என்புழி,

" எதுவது புகையிலதோ
அதுவது நெருப்பிலது,
மடுப்போல "

என்புழி, மலை பக்கமும், அடுக்களை சபக்கமும், மடு விபக்கமும் ஆகும். இவற்றுள் பக்கமும் சபக்கமும் ஆகிய இரண்டும துணிபொருள் (நெருப்பு) உடையனவாகும். ஆனல், விபக்கமாகிய மடுவோ துணிபொருளின்மையை (நெருப்பில்லாமையை) உடையதாகும். இங்ஙனம் துணிபொருளின் இன்மையை உடையதாதலே எதிர்மறையுவமைக்கு இலக்கணம் ஆகும். இவ்விலக்கணத்திற் குன்றித் துணி பொருளின் இன்மையை உடையதாகாதன எல்லாம் எதிர்மறை யுவமைப்போலிகள் எனப்படும்.

**10.** துணிபொருளின்மை உடைத்தாகாதது : இதனைச் " சாத்திய வெதிரேகி " எனக் கூறுவர். மீமாஞ்சகர்,

" ஒலி நிலைபே றுடையது ;
அசரீரியாகலின் ;
எதுவெது அசரீரி யன்றோ
அதுவது நிலைபேறுடையதன்று,
அணுப்போல "

எனக் கூறுகின்றுழி, எதிர்மறை யுவமையாகிய அணுவானது, துணிபொருளாகிய நிலைபேறுடைமையினை எதிர் மறுத்து, அதன் இன்மையை உடைத்தாதல் வேண்டும்! ஆனல், வைசேடிகரின் கொள்கைப்படி அணுவானது 'நிலைபேறுடையது.' ஆதலின், அஃது ஈண்டுத் துணிபொருளின்மையினை உடையதாகாமற் பிழைபட்டு, எதிர்மறை உவமைப்போலி யாயிற்று.

**11.** துணி பொருளின்மை யுடைத்தென்பது தெளியப் படாதது : இதனைச் " சந்திக்த சாத்திய வெதிரேகி " என்பர். சந்திக்தம்-சந்தேகத்திற் குரியது, தெளியப் படாதது.

" இம்மனிதன் பேராசனுவான்,
மதிவழி மரபின னாகலின்,
எவன் மதிவழி மரபின னல்லனே

அவன் பேரரச னல்லன்,
அரசிளங் குமரன் சாத்தன்போல "

என்புழி, துணிபொருள் பேரரசனாதல்; துணிபொருளின்மை பேரரச னாகாமை; துணி பொருளின்மை யுடைத்தென்பது தெளியப்படாமை, பேரரசனாதலும் கூடும் என்பது. ஈண்டுக் கூறிய எதிர்மறை யுவமைக் கூற்றின்படி, 'அரசிளங்குமரன் சாத்தன் பேரரசனாகான்' என்பதே துணிபாதல் வேண்டும்! ஆயினும், அக் கூற்றுத் தெளியப் படாமல் 'ஒரோவழி அவன் பேரரசனாதலும் கூடும்' எனக் கருதுதற்கு இடனுண்மையின், இஃது எதிர்மறை யுவமைப் போலி யாயிற்று.

**12.** ஏதுவின்மை யுடைத்தாகாதது: இது " சாதன வெதிரேகி " எனப்படும். சாதனம் - ஏது.

" ஒலி நிலைபே றுடையது,
அசரீரி யாகலின்,
எதுவெது அசரீரி யன்றோ
அதுவது நிலைபேறுடையதன்று,
இயக்கம் போல "

என்புழி, " அசரீரித் தன்மை "யாகிய ஏதுவானது, 'இயக்கம்' ஆகிய எதிர்மறை யுவமையின்கண் இல்லதென விலக்கப்படிருத்தல் வேண்டும்! அங்ஙனம் விலக்கப்படா மல் 'அசரீரித் தன்மை'யாகிய ஏதுவானது பக்கமாகிய ஒலியிற் போலவே விபக்கமாகிய இயக்கத்தினும் பொருந்தும்படி பிழைபடக் கூறப் பெற்றமையின், இது 'சாதன வெதிரேகி' என்னும் எதிர்மறையுவமைப் போலியாயிற்று.

**13.** ஏதுவின்மை யுடைத்தென்பது தெளியப் படாதது: இதனைச் " சந்திக்த சாதன வெதிரேகி " என்பர். சாதன வெதிரேகி - ஏதுவின்மை. சந்திக்தம் - உடைத்தென்பது தெளியப்படாதது.

" இம்மனிதன் முற்றறிவுடையனல்லன்,
விருப்பு வெறுப்புடைய னாகலின்,
எவன் விருப்பு வெறுப்பு இல்லாதவனோ
அவனே முற்றறி வுடையவன்,
வேதங்களைக் கற்றுவல்ல தேவதத்தனைப் போல "

என்புழி, ஏது விருப்பு வெறுப்புடைமை; ஏதுவின்மை விருப்பு வெறுப்பின்மை; ஈண்டு எதிர்மறை யுவமையாகிய தேவதத்தன்கண் விருப்பு வெறுப்பின்மையாகிய ஏதுவின்மை யுண்டெனத் தெளியப் படாமையால், இது "சந்திக்த சாதன வெதிரேகி" என்னும் எதிர்மறை யுவமைப்போலி யாயிற்று.

**14.** இரண்டின்மையும் உடைத்தாகாதது: இஃது "உபய வெதிரேகி". உபயம் - இரண்டு. அஃதாவது, ஏதுவும் துணிபொருளும் ஆகிய இரண்டினையும் இல்லன வாக விலக்கியொழியாமல், அவை எதிர்மறை யுவமையின் கண்ணும் அமையக் கூறுதல்.

"ஒலி நிலைபே றுடையது,
அசரீரி யாகலின்,
எதுவெது அசரீரி யன்றோ
அதுவது நிலைபேறுடைய தன்று,
வாயுப் போல"

என்புழி, வைசேடிகர்களின் கொள்கைப்படி, வாயுவானது நிலைபேறுடையதும், அசரீரியுமாகு மாதலின், 'அசரீரித் தன்மை'யாகிய ஏது, 'நிலைபே றுடைமை'யாகிய துணிபொருள் ஆகிய இரண்டும், எதிர்மறை யுவமையாகிய 'வாயு'வின்கண் விலக்கப்படவில்லை என வைசேடிகர் தடை நிகழ்த்துவர். ஏதவும் துணி பொருளும் ஆகிய இரண்டும் தன்கண் இன்மையே எதிர்மறை யுவமைக்கு இலக்கணம் ஆகும். அவ்விரண்டின் இன்மை (நிலைபேறின்மை, சரீரித் தன்மை)யையும் வாயு தன்கண் உடைத்தாகாமையால், இஃது "உபய வெதிரேகி" என்னும் எதிர்மறை யுவமைப் போலி யாயிற்று.

**15.** இரண்டின்மையும் உடைத்தென்பது தெளியப் படாதது: இது "சந்திக்தோபய வெதிரேகி" எனக் கூறப்படும். சந்திக்த + உபயம் : சந்திக்தோபயம்.

"கபிலன் விருப்புவெறுப்பிற் றீர்ந்தவனல்லன்,
வெஃகுதல் உடைமையின்,
எவன் எவன் வெஃகுதல் இல்லாதவனோ
அவன் அவனே விருப்பு வெறுப்பிற் றீர்ந்தவன்,
கொற்றனும் பிறரும் போல"

என்புழி, எதிர்மறை யுவமையாகக் கூறப்பெற்ற 'கொற்ற னும் பிறரும்', விருப்புவெறுப்பிற் றீர்தல் ஆகிய துணி பொருளும், வெஃகுதலுடைமையாகிய ஏதுவும் ஆகிய இரண்டின் இன்மையையும் உடையர் என்பது தெளி வுறப் பெறப்படாமையால், இது "சந்திக்த உபய விகலம்" என்னும் எதிர்மறை யுவமைப் போலியாயிற்று.

**16.** சொரூபம் இல்லது: இதனை "அவ்வெதிரேகி" என்பர்.

"இம்மனிதன் உணர்ச்சி வயப் பட்டவன்,
பேசுந் தன்மைய னாகலின்,
எவனெவன் பேசுந் தன்மையன் அல்லனோ
அவனவன் உணர்ச்சி வயப்பட்டவன் அல்லன்,
கற்றூண் போல"

என்புழி, எதிர்மறை யுவமையாகிய 'கற்றூண்' உணர்ச்சி வயப்படாமையும் பேசாமையும் உடையதாயினும், பேசுந் தன்மையர் சிலர் உணர்ச்சி வயப்படாதிருத்தலும் கூடுமாக லின், அவ்விருபண்பும் தம்முள் பிறழ்விலாப் பிரிவின்மை (வெதிரேக வியாப்தி) உடையன என்பது பெறப்படாமை யால், இஃது "அவ்வெதிரேகி" என்னும் எதிர்மறை உவமைப் போலியாயிற்று.

**17.** சொரூபம் உண்மை பிறனுக்கு உடம்பாடாகாதது: இதனை 'அப்பிரதர்சித வெதிரேகி' என வழங்குவர்.

"ஒலி நிலைபே றிலது,
படைக்கப் படுதலின்,
வாயுப் போல"

என்புழி, எதிர்மறை யுவமையாகிய 'வாயுவின்கண்' வைசேடிகரின் கொள்கைப்படி, படைக்கப்படுதலும் நிலை பேறின்மையுமாகிய பண்புகள் இல்லை. அன்றியும், எதிர் மறையுவமை யுறுப்புக் கூற்றிற்குரிய இலக்கணப்படி,

"......எதுவெது படைக்கப்படாதது
அதுவது நிலைபேறுடையது,
வாயுப் போல"

எனக் கூறப் பெற்றிருத்தல்வேண்டும். அங்ஙனம் கூறப்

பெருமையின், இஃது ' அப்பிரதர்சித வெதிரேகி ' என்னும் எதிர்மறை யுவமைப் போலியாயிற்று.

18. வெதிரேக வியாத்தி செயற்கையான் உடையது : இதனை "விபரீத வெதிரேகி" என்பர். அஃதாவது, தன்னுருப்பாகிய எதிர்மறைக் கூற்றை (வெதிரேக வாக்கியத்தை) மாறுபடக் கூறுவது. வெதிரேகம் - எதிர் மறை. விபரீதம் - மாறுபாடு.

" இம்மலை நெருப்புடையது,
புகையுடைமையால்,
எதுவெது புகையில்லாதது
அதுவது நெருப்பில்லாதது,
ஆற்றுவெள்ளம் போல "

என்பது "விபரீத வெதிரேகம்" என்னும் எதிர்மறை யுவமைப்போலி. இதனுள், " எதுவெது நெருப்பில்லாதது அதுவது புகையில்லாதது " எனத் துணிபொருளின் இன்மையை முற்கூறி ஏதுவின் இன்மையைப் பிற் கூறுவதே முறைமையாகவும், " எதுவெது புகையில்லாதது அதுவது நெருப்பு இல்லாதது " என ஏதுவின் இன்மையை முன்னும் துணிபொருளின் இன்மையைப் பின்னுமாக வைத்து முறைபிறழ மாற்றி (விபரீதமாக)க் கூறியதனால், இது " விபரீத வெதிரேகம் " என்னும் எதிர்மறை யுவமைப் போலியாயிற்று.

---

# எட்டும் இரண்டும்*

(வித்துவான் - அம்பை - சங்கரனார்)

நம் பண்டைப் பெரியோர்கள் நமக்கு வேண்டிய பொற்குவியல்களை எல்லாம் தாங்களியற்றிய நூல்களில் புதைத்து வைத்துச் சென்றுள்ளனர். அவற்றைத் தோண்டி எடுத்துத் தூய்மை செய்து அப்புதையலால் வரும் பலனைத்

*24-5-59 அன்று திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயத்தில் திருமூலப்பால் விழாவை ஒட்டிப் பேசிய சொற்பொழிவின் சுருக்கம்.

துய்க்க வேண்டியது நம்முடைய கடமை. நாம் அவ்வாறு செய்கின்றோமா என்றால் இல்லை என்றே பெரும்பாலும் கூறலாம்.

அவ்வாறுள்ள சில புதையல்களில் ஒன்றைப் பற்றித் தான் இக்கட்டுரையில் ஆய முற்படுகின்றேன். நம் பெரியோர்களில் பலர் தாங்கள் எழுதிய நூல்களில் ஒரு தொடரை எடுத்தாண்டிருக்கின்றனர். அஃது "எட்டும் இரண்டும்" என்பது. 'எட்டும் இரண்டும் பத்து' என்பது தான் யாவருக்கும் தெரியுமே. இதற்குப் பண்டைப் பெரியோர்கள் வேண்டுமா ? என்று கேட்கலாம். அந்த எளிமையான நிலையில் அத்தொடரை அமைப்பது அவர்களின் குறிக்கோளன்று. நம் மேலெழுந்த நோக்கால் ஆழமாகச் சிந்தியாது இருப்பதோடன்றி, இது ஒரு சிறந்த தொடரா என்று பண்டையோர் பெருமையையும் இழிக்க நாம் முற்படுகின்றோம். அவ்வாறு கருதாமல் இத்தகைய சிறந்த தொடர்கள் காணப்பெறுமேல் உண்மை காண முயல்வதே அறிஞர்தம் கடன். தாம் துய்த்ததோடன்றிப் பிறருக்கும் விளக்க முற்படவேண்டும். இனி அத்தொடரைப் பற்றி ஆய்வோமாக.

இந்த எட்டும் இரண்டும் என்ற தொடரைப் பல சமயத்தார்களும் எடுத்துப் போற்றியுள்ளனர். வைணவ சமயத்தில் பெருமாள் திருமொழியில் ஒரு ஆழ்வார் எட்டும் இரண்டும் ஆகிய கயிற்றால் பெருமான் கழலை எண்ணித் தன் மனத்தில் கட்டி அழிவற்ற பேரின்பத்தை அடையலாம் என்று கூறுகிறார்.

"மட்டுலாவு தண்துழாய் அலங்கலாய் பொலங்கழல்
விட்டுவீழ்வி லாதபோகம் விண்ணினண்ணி ஏறினும்
எட்டினோ டிரண்டெனும் கயிற்றினால் மனந்தனைக்
கட்டிவீடி லாதுவைத்த காதல்இன்பம் ஆகுமே"

—பெருமாள் திருமொழி - 83

என்பது அப்பாட்டு ஆகும். இதில் "எட்டினோடிரண்டு" என்பதற்கு உரைகாரர்கள் 'பத்து' என்று உரை கூறினார்கள். பத்து என்றால் எண்ணுப் பெயர் அன்று. அவர்கள் உரையை நோக்குக :—

"பத்து - பத்தி. பத்தென்பது பத்தியைக் காட்டுமோ வென்னில் "எட்டினோடிரண்டென்னும் கயிற்றினால் மனந்தனைக் கட்டி என்னக்கடவதிறே" என வருவதால் அறியலாம். "பத்தி வலையில் படுவோன் காண்க". ஆகவே பத்து என்பது பத்தியைக் குறிக்குமெனவும், அப்பத்து என்பதை நேரே கூறாது எட்டினோடிரண்டு என்று கூறிப் பெறவைத்தார் எனவும் கொள்ளலாம். அப்படியாயின் "ஐந்தினோடைந்து" "ஏழினோடு மூன்று" என்று கொள்ளாமல் எட்டினோடு இரண்டு என்று கொள்ளக் காரணம் யாதோ வென்னில் அதற்கும் காரணம் உண்டு. வைணவ சமயத்தில் "மந்திரத்திரயம்" என்ற மூன்று சிறந்த மந்திரங்கள் உள்ளன. அவை :—1. அஷ்டாக்ஷரம், 2. த்வயம், 3. சரமஸ்லோகம் என்பன. அஷ்டாக்ஷரத்தையும் துவயத்தையும் எட்டினோடு இரண்டு என்று கொள்வது மரபு. அஷ்டாக்ஷரம் எட்டெழுத்தாலுள்ள சிறந்த மந்திரம். த்வயம் என்பது பெருமானைக் குறித்த பூர்வவாக்கியம் உத்தரவாக்கியம் என்ற இரண்டு வாக்கியங்களாகக் கொண்டது. அது, ஆறு பதங்களையும், பத்து அர்த்தங்களையும் கொண்டது. இதனையே, நம்மாழ்வார் "எட்டினோடிரண்"டென்னாது "பத்துடை யடியவர்க் கெளியவன்" என்று நேரே பத்தென்றே கூறிப் போந்தார்" என வியாக்கியானக்காரர்கள் விளக்குகின்றார்கள். ஆகவே இந்த எட்டும் இரண்டும் என்ற தொடர் வைணவ சமயச்சார்பில் சிறந்த திருமந்திரங்களைக் குறித்து அதன் சார்பில் பத்தி என்ற பொருளில் வந்திருக்கிறது என்று கொள்ளல் அமைவுடைத்தாம்.

இது போன்று வேறு சமயத்திலுள்ளதோ எனில் காணலாம். நம் சைவ நூல்களில் பல இடங்களில் இத்தொடரைப் பரக்கக் காண வாய்ப்புண்டு. திருவாசகத்தில் மாணிக்கவாசகப் பெருமான் திருப்பெருந்துறையில் தன்னை ஆட்கொண்ட விதத்தினை நினைந்து உருகுகின்றார். அப்பொழுதுள்ள நிலையில் ஒரு பாட்டு காணப்பெறுகின்றது.

கட்டு அறுத்தெனை ஆண்டு கண்ஆர்நீறு
இட்ட அன்பரொடு யாவரும் காணவே
பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை
எட்டினோடு இரண்டும் அறியேனையே.

இப்பாட்டில் தன் தாழ்மையைக் குறிக்க மாணிக்க வாசகர் இத்தொடரை எடுத்தாளுகின்றார். பத்தியைப் பற்றி அறியாத என்னை என்று வைணவசமயத்தார் கூறுவதுபோலக் கூறலாம். ஆனால் பத்தி என்று அவர் கூறுவதற்குக் குரிய காரணங்கள் நமக்கும் அமைவுடைத்தா எனில் இல்லை. ஆகவே நம் சைவ சமயத்தில் இதற்கு வேறு பொருள்களும் கொண்டிருக்கின்றனர். மிகவும் வெளிப்படையாகக் கொள்ளத்தக்க பொருள் "எட்டும் இரண்டும் கூடத் தெரியாத என்னை" என்ற நிலையில் "ஒன்றுக்கும் பற்றாத அற்பனாகிய என்னை" என்பதே பொருளாகும். இத்துடன் இன்னும் ஆழ்ந்து சிந்திக்கத்தக்க பொருள்களும் உள்ளன. தமிழில் 8 என்ற எண்ணை 'அ' என்று இவ்வாறு எழுதுவது வழக்கம். '2' என்ற எண்ணை 'உ' என்று எழுதுவது வழக்கம். ஆகவே "'அ+உ+ம்' அறியேனையே" என்றால் இதனைச் சேர்க்கும்பொழுது "ஓம்" என்ற பிரணவ ஒலிகேட்கப் பெறலாம். அதனால் "பிரணவத்தின் உண்மைப் பொருளைத் தெரியாத என்னை" என்றும் பொருள்படும். இதனையும் விட இன்னும் ஒரு பொருளும் உள்ளது. அதனையே நம் சித்தாந்த சாத்திரங்களில் பலர் கைக்கொண்டிருக்கின்றனர் என்று தெரிகிறது.
எடுத்துக் காட்டாக:—

"எட்டும் இரண்டும் உருவான இலிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள்—சிட்டன்
சிவாயநம என்னும் திருவெழுத் தஞ்சாலே
அவாயம் அறநின்று ஆடுவான்"

என்று உண்மை விளக்கம் கூறுகின்றது.

இப்பாட்டில் "எட்டும் இரண்டும் உருவான இலிங்கத்தே" என்பதற்கு "எட்டும் இரண்டும் உருவாயிருக்கிற யகாரமாகிய ஆன்மாவிடத்திலே" என்று ஆன்றோர்கள் உரை எழுதியுள்ளனர். ஆகவே எட்டும் இரண்டும் சேர்ந்து உருவாவது யகரம் என்று தெரிய வருகிறது. அது எப்படியெனின் 8-க்கு—அ, 2-க்கு உ; 8+2=10. அதையே தமிழ் முறைப்படி எழுத ஆரம்பிக்க அ+உ=ய என்று ஆகும். அதனால் 'ய' என்பது தமிழில் யகரமாயும் அமைகின்றது. இந்த யகரத்திற்கு ஒரு பொருள் உண்டு.

சைவர்களுக்குத் தலைசிறந்த மந்திரமாய ஐந்தெழுத்துக்களும் தன்னுட் சிறந்த பொருள்களைக் கொண்டிலங்குகின்றன. ம-மலம், இருள், அஞ்ஞானம். ந-திரோதம், மறைப்பு ய=ஜீவன், உயிர், ஆன்மா, ஆவி. வ=அருள். சி=பதி, சிவன் என்ற பொருள்களையுடையன. அதனாலேயே சிவன் அருளால் ஆன்மாக்கள் உய்வதற்குரிய ஒரு சிறந்த மந்திரமாக இது இலங்குகின்றது. இதில் ய என்பதற்கு உயிர் என்ற பொருளைப் பெரியோர் கொண்டிருக்கின்றனர். அதைத்தான் ' எட்டும் இரண்டும் உருவான இலிங்கத்தே ' என்று உண்மை விளக்க ஆசிரியர் கூறிப்போந்தார். இலிங்கம் என்பது ஆன்மாவாகிய இடம். இந்த இடத்தில் சிவன் நம் பிறவியறத்தக்க நிலையில் எப்பொழுதும் இம்மந்திரத்தினை ஓதின் ஆடிக்கொண்டிருப்பான் என்று இப்பாவின் பொருள்.

இவ்வாறு சாத்திர நூல்கள் கூறுநிற்ப நம் தோத்திர நூல்களும் இதனையே வற்புறுத்துகின்றன. " எவ்வளவு சாத்திரங்கள் கற்றாலும் பயனில்லை. இறைவனை வழிபட வேண்டும் " என்று வற்புறுத்தப் போந்த அப்பரடிகள்,

" பட்ட ராகிலென் சாத்திரம் கேட்கில்என்
இட்டும் அட்டியும் ஈதொழில் பூணில்என்
எட்டும் ஒன்றும் இரண்டும் அறிகிலென்
இட்டம் ஈசன் என்னாதவர்க்கு இல்லையே "

என்று அருளியிருக்கிறார்கள். இதிலும் உயிரைப் பற்றிய விளக்கங்கள் பல தெரிந்தும் பயனில்லை. இறைவனை வழிபட வேண்டும் என்பதையே " எட்டும் ஒன்றும் (பொருந்தும்) இரண்டும் அறிகிலென் " என்று கூறுகிறார்.

இவ்வாறு உண்மைகளைப் பொதிந்து எளிமையாகவும் ஆழ்ந்து நோக்கும்படியும் சொல்வதில் வல்லார் திருமூலர் ஆவர். அவரும் தம்நூலில் பல இடங்களில் இத்தொடரை மேற்கொண்டுள்ளார். " கூடிய எட்டும் இரண்டும் குவிந்து அறி " (985) எனவும்,

" எட்டும் இரண்டும் இனிது அறிகின்றிலர்
எட்டும் இரண்டும் அறியாத ஏழையர் " (986)

எனவும் "எட்டும் இரண்டும்" என்ற தொடரை இரு பொருள்களில் இங்குப் பெய்துரைத்தலையும் நோக்குக.

ஆகவே இவ் 'வெட்டும் இரண்டும்' என்ற தொடர் பலசமயத்தவரும் தத்தம் கருத்துக்களைப் பெய்து வைத்தற் கேற்ற சிறந்த தொடர் என்றும், அது படிப்பவர்தம் திறத் திற்கேற்ப உயரிய கருத்துக்களைக் கொண்டியங்க வல்லது என்றும், அதனைப் பல பெரியார்கள் தங்கள் நூல்களிலும் சாத்திரங்களிலும், தோத்திரங்களிலும் மேற்கொண்டுள்ள னர் என்றும், இது சிறப்பாகப் பிரணவத்தையும், உயிரை யும் குறிக்க வந்துள்ளது என்றால், இது போன்ற பிற தொடர்களையும் உட்பொருள்களைப் பார்த்து இன்பம் துய்க்க வேண்டுமேயன்றி மேலெழுந்த வாரியாகப் பார்த் துப் போகக் கூடாதென்றும், அன்பர்கள் தெரிந்து உண்மை இன்பமடைய முற்படுவார்கள்.

——

# கந்தரனுபூதி

## (8) குடிகளைத்தவன் வசமாக

அமரும் பதிகேளகமா மெனுமிப்
பிமரங்கெட மெய்ப்பொருள் பேசியவா
குமரன் கிரிராச குமாரிமகன்
சமரம்பொரு தானவ நாசகனே




மூலமந்திரம் :—ஓம் சரவணபவ கிருங் கிறியுங்

நைவேத்தியம் :—பாயசம் ; பலாப்பழம் ; தூப தீபங் கள்.

இங்குக் கொடுத்துள்ள தலைப்பு எட்டுப்பிரதியி லுள்ளது. "குடிகளைத் தன் வசமாக்க" என்பது அச்சுப் புத்தகங்களிலிருப்பதைக் காணலாம்.

இதை மனனம் செய்வார் எந்தத் தனவந்தரிடமும் சென்று வேண்டுவன பெறலாம். எப்படிப்பட்ட லோப குணமுடைய பிரபுக்களும் அவர்மாட்டுத் தயை காட்டுவர்.

இப்பாட்டின் பிரார்த்தனை "அகமாம் எனுமிப் பிமரங் கெட" வேண்டுமென்பது. பிரமை, மயக்கம் என்ற சொற் றொடர்களே பிமரம் என்று இங்குக் குறிக்கப்படுகின்றன. நான் எனக்கொள்ளும் அகந்தைப் புத்தியே இங்கு மயக்க புத்தியாகக் கருதப்படுகிறது. ஏன்? இக் கேள்விக்குச் சிதம்பர சுவாமிகள் பின்வரும் பாடலில் விளக்கங் கூறு கின்றார்கள்.

"ஐந்தொழிலு மெனதிவை களாகுஞ் சிருட்டிமுத
லான முத்தொழில் சடத்தும்
அறிவிடத் தோரிரண்டும் வினைக் கீடாய்
அவற்றை யுயிரறி யாமையால்
முந்திவரு தன்னையும் பிறரையுங் கருதிநனி
முதிர்விழைவு வெகுளி மருவி
முன்னுசுக துன்பங்கள் மன்னியிருவினை மேவி
மூடப் பிறப்பி லாழும்
பந்தமுறு முயிர்சுதந் திரமிலி சடம்பாச
மான கருவிகள் முழுதுமே
பகருமற் றவைநடத் திடு மொருவ னுனிவை
பகுத்துன் சுதந்திர மறச்
சிந்தனைசெய் பந்தமறு மென்றெனக் கருள்குரவ
செங்கீரை யாடி யருளே."

சிருட்டி, திதி, சங்காரமாகிய முத்தொழிலால் சடமும் திரோதான அனுக்கிரக இயலால் உயிரும் இயக்கப்படுதலை உணராது நான் செய்தேன் பிறர் செய்தனனென்று கருதித் துக்க சுகங்களை யேற்று இருவினைப்பயனிடை மூழ்கி மூடப் பிறப்பிலாழும் தன்மையை நோக்கி உயிர் சுதந்திர மற்றது என உணர்ந்து வினைக்கீடாய் எல்லாம் நடத்தப்படு கிறது என்றுணர்ந்தால் பந்தமறும். "நான்" "எனது" என்னும் பதங்களை யேற்படுத்திக் கொள்வது அறியாமை

யாகும். இந்த அறியாமையையே இங்கு "பிரமம்" எனக் கூறப்பட்டுள்ளது. அந்த மயக்கம் தெளிவிக்க "மெய்ப்பொருள்" உண்மைப் பொருளை, பேசியவா(று)= எனக்கு உபதேசித்தவிதம் இத்தன்மைய தென்று குறிப்பிட்டுச் சொல்லத்தக்கதன்று என்று கூறியபடி. "மன வாக்குச் செயலாலே அடைதற்கருவுருவாகி ஒன்று போலே யிருக்கும் பொருளை யெவ்வாறு புகல்வது" என்று கந்த ரலங்காரத்தில் கூறுகிறார்கள். இது அநுபூதி விளக்கமாதலால், யான் எனது அற்றநிலையிலிருத்தல் அனுபவத்தாலடைந்து ஆனந்திக்க வேண்டிய நிலையாகும்.

---

# "பிறந்த நாள்வயிற் பெருமங்கலம்"

திருப்பனந்தாள் ஆதீன மகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின் அறுபத்தொன்றாம் ஆண்டுப் பிறந்தநாள் (ஆவணி மூலம்) விழா **11-9-59** அன்று காசிமா நகரில் மிகவும் சிறப்புற நிகழ்ந்தமை அறிந்து சைவத் தமிழுலகம், சிறப்பாக நமது சைவ சித்தாந்த மகாசமாஜம், பெருமகிழ்ச்சி எய்துகின்றது. சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கச் சுவாமிகள் ஆற்றி வரும் அரும்பெருந் தொண்டுகள் அளப்பரியனவாகும்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் இதுகாறும் ஏறத்தாழ 53 லக்ஷத்துக்கு மேற்பட்ட தொகையினைப் பலப்பல அறக்கட்டளைகட்காக வாரி வழங்கி யுள்ளார்கள். திருமுறை வளர்ச்சிக்காக 31 தருமங்களும், கல்வி வளர்ச்சிக்காக 48 தருமங்களும், சைவ சித்தாந்தம் பரப்ப 7 தருமங்களும், அன்னதானம் செய்ய 125 தருமங்களும், மருத்துவம் செய்ய 5 தருமங்களும், ஸ்நான கட்டம் அநதி நன்கொடை தண்ணீர்ப் பந்தல் ஒளிவளர் விளக்குகள் பசுப் பரிசு கோ சம்வர்த்தனம் கல்லெழுத்து முதலிய பொது வகைகளில் 66 தருமங்களும் சுவாமிகளால் இதுவரையிற் செய்யப்பட்டுள்ளன. அண்மையிற்கூட, நம் சுவாமிகளால் "திருக்கேதார வகையரு நிதி" என ஒரு லக்ஷம் ரூபாய் பலவகை அறங்களுக்காக வழங்கப்பட்டுள்ளது.

இத்தகைய அருட்பெருங் கொடையாளராக விளங்கி வரும் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் அருமை பெருமைகளை நினைக்குங்கா லெல்லாம்,

" பத்திக் கடலே ! குணக்குன்றே !
பாசப் பகையே ! எம்உறவே !
முத்திக் காசே ! சிவானந்த
முதலே ! ஞான மணிவிளக்கே !
சித்திப் பொருளே ! அருள்நந்தி
தேவே ! நின்னைத் தொழும் அடியார்
புத்திக் கமுதே ! யாவர்நினைப்
போல்வார் ? அவரை அறியேமால் !"

எனப் பிரபுலிங்கலீலையின்கண் போதரும் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளின் அரிய இனிய திருப்பாடல் நம்மனோர் நினைவிற் போந்து இன்புறுத்துகின்றது.

அத்துணைப் பெருஞ் சிறப்பினராகத் திகழும் நமது ஸ்ரீலஸ்ரீ சுவாமிகள் அவர்களை,

" அன்னன் ஆகலின், எந்தை உள்ளடி
முள்ளும் நோவ உறற்க தில்ல !
ஈவோர் அரியஇவ் வுலகத்து,
வாழ்வோர் வாழ அவன் தாள்வா ழியவே !" (புறம் - 171)

எனப் புறநானூற்றுப் புலவர் ஒருவர் வாழ்த்திய முறைமை போல, நமது சமாஜமும் " பல்லாண்டு " கூறி வாழ்த்தி மகிழ்கின்றது.

"ஒன்றுபத் தடுக்கிய கோடிகடை இரீஇய
பெருமைத் தாகநின் ஆயுள் தானே!" (புறம் - 18)

" நின்னாள் திங்கள் அனைய வாக! திங்கள்
யாண்டுஓர் அனைய வாக ! யாண்டே
ஊழி அனைய வாக ! ஊழி
வெள்ள வரம்பின வாக." (பதிற்றுப்பத்து - 90)

ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளின் " பிறந்தநாள் வயிற் பெருமங்கலம் " நிகழ்ந்த ஞான்று, திருப்பனந்தாட் செந்தமிழ்க் கல்லூரியின் சார்பில் வெளியிடப் பெற்றுள்ள " ஸ்ரீ அருள்

நந்தி சுவாமிகள் பிரபந்தங்கள்" என்னும் அன்பு மலர்த் தொகுதி, நவமணி மாலை, விருத்தசாங்கம், அலங்கார பஞ்சகம், திருவங்கமாலை, திருமரபுத்தொகை, போற்றித் திருவகவல், திருமும்மணிக்கோவை என்னும் இனிய கவிதைகள் பல நிரம்பி, மிக்க பக்தி நறுமணம் பரப்பி, இலக்கிய இன்சுவைத்தேன் பிலிற்றிச் சிறந்து விளங்கு கின்றது.
—முருகவேள்

---

# பொன் விழா

சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கத் தொண் டாற்றுதலையே குறிக்கோளாகக் கொண்டதும், திரு. வ. பழ. சா. பழனியப்பச் செட்டியார் அவர்களால் தோற்று விக்கப் பெற்றதும், மகாமகோபாத்தியாய பண்டிதமணி திரு. மு. கதிரேசஞ் செட்டியார் அவர்களாற் பெரிதும் போற்றி வளர்க்கப் பெற்றதுமான மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபையின் பொன்விழா, 3, 4–10–59 சனி ஞாயிறு களில் மிகவும் சிறப்புறக் கொண்டாடப் பெற்றது. முதல் நாள் விழா உயர்திரு. டாக்டர் ராஜா சர் மு. அ. முத்தையச் செட்டியார் அவர்கள் தலைமையிலும், இரண்டாம் நாள் விழா உயர்திரு. டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தலைமையிலும் நடைபெற்றன. சென்னை மாநில முதலமைச் சர் உயர்திரு. கனம் K. காமராஜ நாடார் அவர்கள் விழா வைத் தொடங்கி வைத்தார்கள்.

சபையின் சார்பில் டாக்டர் திரு. ரா. பி. சேதுப்பிள்ளை, பேராசிரியர் திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், வித்துவான் திரு. மு. அருணாசலம் பிள்ளை ஆகிய பேரறிஞர் களுக்குச் சிறப்பியற் பட்டங்கள் வழங்கப்பெற்றன. சபைச் செயலாளர் திரு. ஆ. நாகப்பச் செட்டியார் அவர் கள், பட்டம் பெற்ற பேராசிரியர்களின் பெருமைகளை விளக்கிப் பேசினார்கள்.

உயர்திரு. அண்ணல் வ. பழ. சா. பழனியப்பச் செட்டி யார், உயர்திரு. இளவல் வ. பழ. சா. அண்ணாமலைச் செட்டி யார் படங்களை டாக்டர் ராஜா சர் மு. அ. முத்தையச் செட் டியார் அவர்களும், டாக்டர் ராஜா சர் மு. அண்ணாமலைச்

செட்டியார் அவர்கள் படத்தினைத் திரு டி. எம். நாராயண சாமிப் பிள்ளை அவர்களும், அரசஞ் சண்முகனார் படத்தினை டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்களும், மு. ரா. கந்த சாமிக் கவிராயார் அவர்கள் படத்தினைப் பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்களும் திறந்து வைத்தார்கள்.

உயர்திரு. டாக்டர். வ. சுப. மாணிக்கனார் அவர்கள் பொன்விழா மலரின் சிறப்பை விளக்கினார்கள். கனம் முதலமைச்சர் திரு. K. காமராஜ நாடார் அவர்களால் கல்லூரிக் கட்டிடக் கால்கோள் அமைக்கப்பெற்றது. திரு. டி. எம். நாராயணசாமிப்பிள்ளை அவர்கள் மாணவர் களுக்குப் பரிசுகள் வழங்கினார்கள். பேராசிரியர் பண்டித வித்துவான் முத்தமிழ் வித்தகர் உயர்திரு லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில், 3-10-59 சனியன்று இரவு, ரஞ்சிதகான இசைமணி மதுரை திரு. எஸ். சோமசுந்தரம் அவர்கள் குழுவினரின் இசையரங்கு நடைபெற்றது.

4–10–59 ஞாயிறன்று காலை மாலை இருவேளைகளிலும் பேராசிரியர் டாக்டர். திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் தலைமையில், " தமிழ் நாடு " ஆசிரியர் திரு. தி. மாணிக்க வாசகம் செட்டியார், டாக்டர் திரு. மா. இராசமாணிக் கனார், பேராசிரியர் திரு. கோ. சுப்பிரமணிய பிள்ளை, பாலகவி வயிநாகரம் திரு. வே. இராமநாதன் செட்டியார், புலவர் திருமதி சி. குழந்தையம்மாள் எம்.எல்.ஏ., பேராசிரி யர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார், பேராசிரி யர் டாக்டர் திரு. வ. சுப. மாணிக்கனார் ஆகிய பேரறிஞர் கள் முறையே " இலக்கிய ஆராய்ச்சி ", " தமிழர் வாழ்வு ", " கடவுளைக் கண்டவர் ", " திருவள்ளுவரும் சித்தாந்த சைவமும் ", " சங்ககால மகளிர் நிலை ", " கம்பர் கவித் திறம் ", " பண்டித மணியும் திருவாசகமும் " என்னும் பொருள்கள் குறித்து அரிய இனிய விரிவுரைகள் ஆற்றிச் சிறப்பித்தார்கள். மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபையும், அதன் சார்பில் நடைபெறும் கணேசர் செந்தமிழ்க் கல்லூரியும் வளர்ந்தோங்கிப் பன்னெடுங்காலம் நின்று நிலைபெற இறையருள் துணைசெய்வதாக! —முருகவேள்

---

# சேக்கிழார் திருவாக்குண்மை

திரு. V. A. ஆத்மாராம் நாயுடு, பெங்களூர்

(மலர் 32; இதழ்-250-ம் பக்கத் தொடர்ச்சி)

மேற்கண்ட கட்டுரையில் ஸ்ரீலஸ்ரீ சம்பந்த சரணாலய சுவாமிகள் "பெரிய புராணத்தைப் பாடியவர் சேக்கிழாரென்றே பலரும் கூறுவர். அது தவறு. நடராசப் பெருமான் பாடினார் என்பதே உண்மை" என்று குறிப்பிடுகிறார். இதனையொட்டியே ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகர் அவர்களும் விரிவாகக் கூறியிருக்கின்றனர் பல்லாண்டுகளுக்கு முன்னர். ஆனால் ஆரம்ப முதல் இறுதிவரை சேக்கிழார் வாக்கை உன்னி நோக்குங்கால் தில்லைக்கூத்தன் அடியெடுத்துக் கொடுக்க, அவன் திருவருள் துணைகொண்டு அவரே பாடினாரென்பது பெறப்படும். அறிஞர்கள் ஆராய்வார்களாக.

### சில அகச் சான்றுகள்

(1) மயலில் சீர்த்தொண்டனாரை யானறிவகையால் வாழ்த்தி (திருநீலகண்டர் புராணம் 44)

(2) எல்லையில் புகழில்மிக்க எறிபத்தர் பெருமையெம்மாற் சொல்லலாம் படித்தன்றேனும் ஆசையாற் சொல்லலுற்றேன் (எறிபத்த நாயனார்-1)

(3) நம்பெருமான் செய்தபணி நாந்தெரிந்தவா றுரைப்பாம். (ஏனாதிநாயனார்-42)

(4) மன்னுமானாயர் செய்கை யறிந்தவா வழுத்தலுற்றேன். (அரிவாட்டாய நாயனார்-23)

(5) அடியனேன் ஆதரவால் ஆண்டவரசின் சரிதப் படியை யானறிந்தபடி பகர்ந்தேன் (திருநாவுக்கரசு நாயனார்-429)

(6) அருந்தமிழாகரர் சரிதை..................அறிந்தபடி துதி செய்தேன். (ஞானசம்பந்தர்-1256)

(7) நரசிங்க முனையர் திறம் நாமறிந்தபடி யுரைப்பாம் (புகழ்ச்சோழர்-41)

(8) முழுநீறுபூசிவாழும் புனிதர் செயலறிந்தவா புகலலுற்றேன் (முப்பொழுதும் திருமேனி தீண்டுவார்-3)

இவையன்றியும் ஒவ்வொரு நாயன்மார் சரிதமுடிவில் அவர் கமலமலர்க் கழல்வணங்கி, அடுத்த நாயனார் செய்கை வழுத்துவே னென்றுங் கூறிவருகிறார். நடராசப்பெரு

மானே பாடினாரென்றால் இவ்வண்ணங் கூறவேண்டிய அவசியமில்லை. இன்னும் உமாபதி சிவாசாரியார் தாமியற்றிய சேக்கிழார் புராணத்தில் கூறுவனவும் சான்றாகும்.

(1) எந்தையார் திருவருளையுன்னி......................செந்தமிழ்த் தொடையால் விளங்கிய திருவிருத்தம் (சேக்கிழார் நாயனார் புராணம்-35)

(2) அறுதிபெறத் திருமரபு குறித்துரையாப் புராணமவைக ளொருபதின்மூன்று..............உறுமரபு தெரியாப் புராணமவையோரேழு மூறியாக் கதையேழு பேரறியாக் கதையெட்டு (சேக்கிழார் புராணம்-37)

நிற்க, காரைக்காலம்மையார் புராணம் 34-ம் பாசுரத்தில் "கன்னிநாட்டோர் பட்டினமருங்கு சேர்ந்தான்" என்று கூறுகிறார்; பட்டினத்தின் பெயர் கூறவில்லை. நடராசப் பெருமானே எழுதினாரென்றால் முழுவிவரமும் காணப்படும். இத்தகைய குறிப்புகள் பலவுள.

---

[சேக்கிழார் தாமே தமது புலமையினாற் பெரிய புராணம் பாடினர் எனின், அவர் இறையருள் பெற்ற பெரியார் என்பது சிறப்பு முறையிற் பெறப்படாது. நடராசப் பெருமான்தான் பெரியபுராணம் பாடினர் எனின், சேக்கிழார் புலமைச் சிறப்பு மிக்கவர் என்பது விளக்கமுறாது. இவ்விருதிறக் கூற்றும் ஒவ்வொரு பகுதியே யுண்மையாகும்.

"அறிபவன் அறியுந் தன்மை அருளுவன் என்னில்,ஆன்மா
அறிவில தாகும்; ஈசன் அசேதனத் தளித்தி டானே!"

எனவரும் சிவப்பிரகாசச் செய்யுட் பகுதி ஈண்டு நினைவு கூரற்பாலது. வெறுங்கல்வி யறிவு ஒன்றனாலேயே நூல்கள் பாடிய ஏனைய பல புலவர்களைப் போலாமல்,

"உற்கைதரும் பொற்கை யுடையவர்போல் உண்மைப்பின்
நிற்கை அருளார் நிலை"

எனத் திருவருட்பயன் கூறுவது போல, நடராசப் பெருமானின் திருவருளைத் துணையாக முன்னிட்டுக் கொண்டு, அத் திருவருளின் வழிநின்று, சேக்கிழார் தமது "ஆராய்ந்த கல்வி" நலனாற் பெரியபுராணம் பாடியருளினர் என்பதே முழுவுண்மையாகும். பெரியபுராணத்துள் அருள் நலமும்

ஆராய்ச்சி நலமும் ஆகிய இரண்டும் ஒருங்கே சிறந்தமைந்து "ததி நெய்போல்" விளங்கித் திகழ்கின்றன. இவ்விரண்டனுள் "மயூர நிருத்த நியாயம்" பற்றிப் பெரியபுராணத்துள் விளங்கித் திகழும் ஆராய்ச்சி நலத்தினும், அருள் நலத்திற்கே முதன்மை கொடுப்போர் அதனை நடராசப் பெருமான் பாடினர் எனவும், அருள் நலத்தினும் ஆராய்ச்சி நலத்திற்கே முதன்மை யளிப்போர் அதனைச் சேக்கிழார் பாடினர் எனவும் கூறுவர். சேக்கிழார் ஆராய்ச்சி யுணர்வும் அநுபூதி யுணர்வும் ஆகிய இரண்டும் ஒருங்கே நிரம்ப வுடையவர் என்பதில் நம்மனோர்க்கு ஐயம் இல்லை. ஆயினும், எடுத்துக் கொண்ட பொருட் பகுதியினைச் சிறப்புடைத்தாக வற்புறுத்துதல் என்னும் "பிரதிஞ்ஞா ஹேது நியாயம்" பற்றி, இவ் விரண்டனுள் ஏதேனும் ஒன்றற்கு மிக்க சிறப்பளித்துத் தத்தம் நோக்கத்திற் கேற்பப் பேசுதல் அறிஞர்களுக்கு இயல்பேயாம். ஆதலின், இருசாரார் கூற்றும் ஒவ்வொரு வகையிற் பொருந்துவதே யாகுமன்றி, இழுக்குடையதன்று—முருகவேள்]

---

## அப்பர் கரையேறிய திருக்குளத் திருப்பணி

அப்பர் அடிகள் சிவனருளால் கல்லைத் தெப்பமாகக் கொண்டு கரையேறிய அப்பர் தெப்பக்குளத் திருப்பணிக்கு மலாய் நாட்டுத் தமிழ் அன்பர்கள் மாஜி இந்தியப் பள்ளி வித்தியாதரிசி திரு. பொன். கோவிந்தசாமி அவர்கள் மூலம் அளித்த நன்கொடை ரூபாயின் விபரம் வருமாறு :

| பினாங்கு | ரூ. | | |
|---|---|---|---|
| 1. ஜோதி அண்டு கம்பெனி | 20 | 8. நடராசன் அண்டு கம்பெனி | 5 |
| 2. துரைசாமித் தேவர் அண்டு சன்ஸ் | 10 | 9. திரு. கே. கே. மாணிக்கமுதலியார் | 10 |
| 3. சித்திரா பிளையகாட் கம்பெனி | 20 | 10. எஸ். எலகப்பிள்ளை | 10 |
| 4. நேஷனல் ,, | 5 | 11. திருமதி இராமலிங்கம் | 10 |
| 5. கஸ்தூரி ,, | 5 | 12. திரு. கே. கோபால் | 10 |
| 6. இந்தியன் பேமஸ் பாளையகாட்கம்பெனி | 5 | 13. திரு. எஸ், நடராஜா | 5 |
| 7. ஆசியா ,, | 5 | 14. டி. துரைசாமி முதலியார் | 5 |
| | | 15, திரு. எம். சிவப்பிரகாசம் | 3 |
| | | 16. டி. பாபு | 10 |

17. என். எஸ். கந்தையா 10
18. டி. கோபால் 5
19. ஜே. இ. ஹார்ஜிதம் 5
20. எஸ். முனுசாமி 5
21. ஸ்ரீ சுந்தரி பனியன் காட் கம்பெனி 5
22. என். கோவிந்தசாமி 5
23. டி. பி. கோபால கிருஷ்ணன் 10
24. கே தங்கவேலு 5
25. எம் குப்புசாமிப்பிள்ளை 5
26. வி. கோவிந்தசாமி 5
27. ஏ நல்லுசாமி 5
28. எ. மலையப்பன் 5
29. வி. கிருஷ்ணசாமி 5
30. டாக்டர் யங் 10
31. ஏ இராமலிங்கம் 5
32. எஸ் கே. வேலாயுதம் பிரதர்ஸ் 5
33. ஆர் எஸ். குருசாமிச் செட்டியார் 5
34. டாக்டர் ஆர் லட்சுமணசாமி 10

பிறை

1. திரு. வி. நமசிவாயம் 5
2. திரு என். கோவிந்தசாமி 5
3. திரு. எஸ். கோவிந்தராஜு 6

அலோர் ஸ்டோர்

1. பெ செ. சீனிவாசகம் 20
2. பி. சுந்தரம் 5

பட்டர்வொர்த்

1. திரு. ஆர். நடராஜா 5
2. ,, க. இரங்கசாமிக் கோனர் 3
3. ,, எம். பச்சைமுத்து 3
4. திரு. ஆர். சொக்கலிங்கம் 5
5 ,, எ. சுப்பையா 3
6 ,, ஆர். சுந்தரம் 3
7. ,, ஆர். போலையாபிள்ளை 3
8. ,, மு பழனியாண்டிப் பிள்ளை 5
9 ,, வி. சங்காலிங்கம் 5

தைப்பிங்

1 திரு. சா. சிங்காரம் 5
2. திரு. பி. ஆர். நடேசன் செட்டியார் 3
3. திரு. சு. ப. மாரிமுத்து 5
4. திரு. செ அருணசலம் 3
5. திரு. கே. கந்தையா 3
6. திரு. கே. சொக்கலிங்கம் 3
7. திரு. எம். கே. முத்து ராமலிங்கம் பிள்ளை 10
8. திரு. கு. வேலுசாமி சேர்வை 5
9. திரு. கா. செல்லையா 5
10 திரு. கே. சிவரத்தினம் 3
11. திரு. டாக்டர் து. மார்க்கண்டு 5
12. திரு. ரா. சண்முகவேல் 10

சுங்கை பட்டானி

1. திரு. ஊ. கோபால கிருஷ்ணன் 20
2. திரு. எம். இராமசாமி 5
3. திரு. அ. கந்தையா 5
4. திரு. சு மு. மு. முத்து கருப்பன் செட்டியார் 5
5. திரு சிவ கரு. முத்தையா செட்டியார் 3
6. திரு கன கும. கிட்டங்கி 5
7. திரு. சீனிசெட்டியார் 3

8. திரு. சுப. மு. ராமன் 3
9. திரு. சேவு 3
10. திரு. கரு. சி. மா. சி. கா. லெ. கொ. 5
11. திரு. டி. மருதன் ஸ்டோர்ஸ் 3
12. திரு.வெ.கிருஷ்ணன் 3
13. திரு.என்.ஆர். அச்சன் 10
14. திரு. மா. சு. வீரப்பிள்ளை 3
15. நாகப்ப பிரதர்ஸ் 3
16. திரு. பழனி 3
17. திரு. தா. ரா. வெங்கிடாலசம் 3

சிங்கப்பூர்

1. திரு. ஜி. ஆர். தசரத ராஜு 10
2. திரு. டி. என். மாணிக்கம்பிள்ளை 3
3. திரு.பி. கோவிந்தராஜு 5
4. திரு. கே. வைத்திய லிங்கம் செட்டியார் 5
5. திரு. சி. எஸ். ராஜா பாலகிருஷ்ணன் 3
6. திரு. ஜி. ஆறுமுகம் 3
7. திரு.ஆர். இராஜகோபால் 3
8. திரு.ஆர்.எம். கிருஷ்ணன் 5
9. திரு. எ. சுவாமிநாதன் 3
10. திரு.வி பக்கிரிசாமி 10
11. வி. கோவிந்த முதலியார் அண்டு சன்ஸ் 5
12. திரு. வி.பி. கோபால் 10
13. திரு.கே.எம். தங்கவேலு 5
14. திரு. ஒ. எம். மையந்தாபன் 5
15. திரு. எஸ். வேலாயுதம் 5
16. என். வி. வெங்கடாசலம் பிரதர்ஸ் 5
17. அணி. மணி. பொற்சாலை 5
18. திரு. ஜி. கணபதி 5
19. திரு. கே.பி. மூர்த்தி 5
20. ,, எஸ். இரத்தினசாமி 5
21. ,, பொ.கோவிந்தசாமி 10
22. ,, சிரஞ்சீவி 5
23. ,, கே. இரங்கசாமி செட்டியார் சன்ஸ் 10

கோலாலம்பூர்

1. திரு. ஆர். இரங்கசாமி அய்யங்கார் 5
2. திரு.எஸ். ஆ. ஆறுமுகம் 3
3. ,, டி. இராஜேந்திரன் 3

ஆக மொத்தம் ரூபா 609

மலாய் நாட்டிலிருந்து ஏற்கெனவே வந்த நன்கொடைகளின் விபரம் மலர் 29 ; இதழ் 11-லும் (2029/-) மலர் 31; இதழ் 9-லும் (543/-) வெளிவந்துள்ளன. மலாய் நாட்டு அன்பர்கள் அளித்துள்ள நன்கொடையின் மொத்தத் தொகை ரூ. 3181.

அப்பர் பெருமானின் ஆலயத்தை மலாய் நாட்டு இந்தியப் பள்ளி மாஜி வித்யாதரிசி திரு. பொன். கோவிந்தசாமி அவர்கள் தம் சொந்தச் செலவில் அமைத்துத் தருவதாக மேற்கொண்டுள்ளார். —அப்பர் திருப்பணிக் குழுவினர்

# திருநெறி விளக்கம்*

### கணபதி

காயமெனுங் கூடத்து மோகக் கம்பங்
கற்பனையாங் கனையமவை முறித்துக் காலின்
மாயவிலங் கினையொடித்துக் கருமப் பேராய்
வரும்பரிக்கா ரரைத்துரந்து வளைந்து நிற்கும்
தீயகுணக் கரணமாம் பாகர் சற்றுஞ்
சேராத வகைவீசிச் சிவவே கத்தால்
பாயுமருண் ஞானமத வேழத் தின்பொற்
பாதமுற வேதமுறும் பவங்கள் போமே. (1)

### நடராசப் பெருமான்

பேரொளியாய் அளவில்பேர் இன்ப மாகிப்
பேதமற வெவ்வுயிர்க்கும் போத மாகி
யாரறிவு மறிவரிய வகண்ட வுண்மை
யநுபவமே தனுவாகி யம்மை காணப்
பாருலவு பிறப்பகலப் பொதுவி னின்று
பரஞான வானந்தப் பாத நல்கும்
சீரொளிய செங்கமலப் பாத மென்றன்
சிந்தையினி லுறவணங்கிச் சென்னி வைப்பாம். (2)

### சிவகாமசுந்தரியம்மை

மேவுபரை திரோதமுட னிச்சை ஞானம்
வியன்கிரியை யானந்த வீடு நல்கும்
தாவிலருள் உருவாகி மாமாயை மாயை
தனுகரணு திகடழைப்பத் தலமா யுள்ள
மூவகைய வுபாதானம் பொருந்தி யேக
முதலுமாய் ஐந்தொழிற்கு மூல மாகிப்
பாவனையிற் பொதுவினடங் காண வல்ல
பைந்தொடியாள் பாடகத்தாள் புந்தி வைப்பாம். (3)

---

*தஞ்சைச் சரசுவதி மகால் நூல்நிலைய ஏட்டுப் பிரதிகளினின்று எடுத்து வெளியிடப்பெறுவது.—தீ. கி. நா.

### திருஞானசம்பந்தர்

பொய்யுடைய பரசமயத் திமிரம் போக்கும்
பொங்குகதி ரங்கமொரு பூவை யாக
மெய்யுடைய மறைத்தமிழ்நூற் பாட வல்ல
வெங்குருவாழ் எங்குருவாம் விமல மூர்த்தி
பையுடைய வரவல்குல் உமையாள் கொங்கைப்
பரஞானப் பாலருந்திப் பரனைக் காட்டும்
கையுடைய கற்பகத்தின் செம்பொற் றண்டைக்
காலிரண்டு மென்னிரண்டு கண்ண தன்றே. (4)

### திருநாவுக்கரசர்

பாழமணர் சிறைநீங்கி யதிகை மேவும்
பரஞ்சுடரைப் பணிந்துதமிழ் மாலை பாடிச்
சூழமழ னீற்றறையை வென்று குண்டர்
துய்ப்பிக்கு நஞ்சமமு தாகத் துய்த்து
வேழமது பணிவித்து வைய மீதில்
வெண்ணீறு மஞ்செழுத்து விளங்கி யோங்க
ஆழிமிசைக் கன்மிதப்பில் வந்த நாவுக்
கரசினடி பரசமல மகலு மன்றே. (5)

### திருநாவலூரர்

மறைமுதல்வன் விருத்தமறை யவனாய் வந்து
மணம்விலக்கி யாவணத்தால் வலிய வாண்ட
நிறைபுகழோன் ஆரூரிற் பரவை தன்பால்
நின்மலனைத் தூதுவிடு நேசன் ஐயாற்(று)
இறையவனை யழைப்பளவில் ஆறு நீங்கும்
எழிலசை யான்கமல வெள்நீர் வாவித்
துறைமுதலை மதலையுமி ழென்ன வல்ல
சுந்தரனற் சேவடியே சிந்தை செய்வாம். (6)

### திருவாதவூரர்

அருவிசொரி விழியிணையும் புளகக் காடும்
ஆராத பெருங்காத லவிழ்ந்த வுள்ளம்
உருகுதொறுஞ் சிவமயமா வோது முண்மை
புலவாத வாசகமு மொருநீ ராகி

இருவகையு மிறந்தபே ரின்ப முத்திக்
கிதுவடிவே யெனும்வடிவு முடைய ஞானப்
பெருகொளிசேர் நடராசன் கோயில் வாய்தற்
பிச்சன்மலர்த் தாளிணையே யிச்சை செய்வாம். (7)

## திருத்தொண்டர்கள்

நீருலவு சடைதாழ நிமலை காண
நின்றிறைவ னடம்புரியு நிருத்தா னந்த
வாரமுத நுகர்தில்லை வாழு மெய்ம்மை
யந்தணரே முதலாக வாரூர் தன்னில்
ஏரிலகு பரவைபால் எந்தை தன்னை
யிரவிருகா னடப்பித்தோ னீற தாகச்
சீருலவு திருத்தொண்டத் தொகையி லுள்ள
சிவனடியார் பதமலரே சென்னி வைப்பாம். (8)

## சம்பந்தசரணாலயர்

எம்பந்த பாசமறக் காழி வந்த
என்றுணைவன் எழுதுமறை எழுதும் பேறு
நம்பன்றன் அருளதனாற் பெற்ற ஞான
நன்முனிதத் துவவிளக்க நவின்ற நாவன்
வம்பின்கட் கதறிவரும் புத்த நந்தி
மௌலியினி லிடிவிழுவண் டமிழ்நூல் பாடும்
சம்பந்த சரணால யன்றன் பாதம்
சந்ததமு நைந்துருகிச் சிந்தை செய்வாம். (9)

## தொண்டர்சீர் பரவுவார்

பத்திநிறை கடல்குன்றைப் பதியில் வந்த
பரமமுனி பாரிலறு பத்து மூவர்
சுத்தநெறித் தொண்டவர்தம் பேறு தொண்டத்
தொகையடைவிற் றுதித்துலகு துன்பந் தீர
வைத்தவிறை வன்றொண்டர் பாதம் போற்ற
வந்தபிறப் பிணிவணங்க லுற்றே னென்னுஞ்
சித்தமுடைத் தொண்டர்சீர் பரவ வல்லான்
செய்யமலர்ச் சேவடியென் சென்னி வைப்பாம். (10)

(தொடரும்)

## செய்திச் சுருக்கங்கள்

திருவாசகத் திருவிழா : திருச்சிராப்பள்ளி அருள்நெறித் திருக்கூட்டச் சார்பில், இரு நாட்கள் (3, 4-10-59) மலைக் கோட்டை நூற்றுக்கால் மண்டபத்தில், காரைக்குடி அழகப்பச் செட்டியார் பயிற்சிக் கல்லூரி முதல்வர் திரு. ப. துரைக்கண்ணு முதலியார் எம்.ஏ., எல் டி அவர்கள் தலைமையிற் சிறப்புற நடைபெற்றது. தேவகோட்டைத் தமிழ் வள்ளல் சித்தாந்தப் புரவலர் திரு. சேவு. மெய்யப்பச் செட்டியார் அவர்கள் தொடக்கவுரையும், திருவாசக விழாச் சிறப்புமலர் வெளியீட்டுரையும் நிகழ்த்தினார்கள். மாம்பாக்கம் குருகுலத் தலைவர் திரு. ஆசிரியர் இளவழகனார், பேராசிரியர் திரு. ஜி. சுப்பிரமணிய பிள்ளை எம். ஏ., பி. எல்., திரு. அனந்தகிருஷ்ணன் எம். ஏ., புலவர் முருகவேள் எம். ஏ., எம். ஓ, எல்., வித்துவான் திரு. க. சுவர்ணகாளீச்வரன் ஆகிய அறிஞர் பெருமக்கள் அரிய இனிய விரிவுரைகள் ஆற்றினார். தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் இரு நாட்களிலும் உடனிருந்து வாழ்த்துரை முதலியன வழங்கிச் சிறப்பித்தார்கள். சிதம்பரம் திரு. மு. கனகசபைப் பிள்ளை, திரு. மு. சுப்பிரமணிய முதலியார் ஆகியவர்களின் திருநெறி இசையரங்கும் திருநெல்வேலி எம். கே. சின்ன சுப்பையா குழுவினரின் நாதசுர இன்னிசையும் நன்கினிது நடைபெற்றன. செயலாளர் திரு. சொ. கிருஷ்ணன் அவர்கள் நன்றியுரை நவில, இறை வாழ்த்துடன் விழா இனிது நிறைவுற்றது.

பூவாளூர்ச் சைவசித்தாந்த சங்கம்: 49-ஆம் ஆண்டுவிழா திரு. புலவர் முருகவேள் எம்.ஏ.,எம்.ஓ.எல். அவர்கள் தலைமையில் 27-9-59 ஞாயிறன்று நடைபெற்றது. சங்கம் நிறுவிய துங்கரும், அண்மையிற் காலஞ் சென்றவரும் ஆகிய சைவப்பெரியார் திரு. அ. ரா. அமிர்தஞ் செட்டியார் அவர்களின் திருவுருவப் படத்தினைத் திரு. ராஜா சிதம்பரம் ரெட்டியார் எம் எல்.ஏ. அவர்கள் திறந்துவைத்துச் சிறந்ததொரு சொற்பொழி வாற்றினார்கள். வித்துவான் வீ. திருமால், திருமதி பிருந்தாதேவி அம்மையார், வித்துவான் திரு. செ. சண்முக சுந்தரம் ஆகியவர்கள் சொற்பொழி வாற்றிச் சிறப்பித்தார்கள். இதன் பொன் விழா விரைவிற் பொலிவதாகுக!

மாதர் மணிவாசக சங்கம், விருதுநகர்: 27-9-59 அன்று ஐந்து ஆறும் ஆண்டு விழா நிகழ்ந்தது. காலையிலும் மாலையிலும் முறையே திருமதி புஷ்பம் நடராஜன் அவர்களும், மதுரையாதீனம் சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகளும் தலைமை தாங்கினார்கள். திருமதி ஜெயபுஷ்பம் அவர்கள் விடைக் கொடியை ஏற்றுவித்தார்கள். திரு. ச. ப. கொத்தாள நாடார் விழாத் திறப்புரையும், திரு. ப. வ. விநாயக மூர்த்தி நாடார் தொடக்கவுரையும் நிகழ்த்தினர். புலவர் மணி திரு டி. கே. சுந்தரமூர்த்தி, திருமதி அ. கோசலையம்மாள், திருநெறிப் புலவர் இராசகோட்டியப்பன், திரு. அ. திருமலை முத்துசாமி எம்.ஏ. பி.டி. ஆகிய அறிஞர்கள் சொற்பொழிவாற்றினர். சங்கச் செயலாளர் திருமதி ச. ப. கொ. மீனம்பாள் அவர்கள் பரிசுகளும் ஆடைகளும் வழங்கினார்கள். திருமதி அ சு ப. அ, கிருட்டினம்மாள் அவர்கள் ஏழைகட்கு அன்னம் வழங்கினார்கள். சிவஞானச் செல்வி திரு. வை. தில்லைக் காமாட்சி அம்மாள் நன்றியுரை நவின்றார்கள். இம் மாதர் மணிவாசக சங்கத்தினர் 1954-ல் நமது சமாஜத்தின் 49-ம் ஆண்டு விழாவைச் சிறப்புற நடத்தித் தந்தமை ஈண்டுக் குறிப்பிடற்பாலது.

சன்மார்க்க சங்கம், தொரப்பாடி (வேலூர்): சிதம்பரம் இராமலிங்க அடிகளார் பிறந்த நாள் விழா 3-10-59 சனிக்கிழமையன்று ஸ்ரீலஸ்ரீ வித்துவான் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமையிற் சிறப்புற நடைபெற்றது. திரு அருட்பா பாராயணமும் ஏழைகளுக்கு உணவளித்தலும் நன்கினிது நிகழ்ந்தன. திரு. கே. ஆறுமுகம் ஜோதிக் கொடியை ஏற்றினார்கள். திரு. நடராஜப் பிள்ளை கடவுள் வாழ்த்தும், திரு. டி. ஏ. விநாயகம் தலைவர் வரவேற்புப் பாடலும் பாடினர். திரு. தேவசேனாபதி தேசிகர் வரவேற்புரை நிகழ்த்தினார். திரு. வி. கே. கிருஷ்ணமூர்த்தி எம்.எல்.ஏ., திருமதி எம். இ. சரஸ்வதி அம்மையார் எம்.ஏ., திரு. ச. சிவகுமரன் எம்.ஏ. ஆகிய பெருமக்கள் வள்ளலாரின் மாண்புகள் குறித்துச் சொற்பொழிவுகள் ஆற்றினர். செயலாளர் திரு. சுபேதார் டி. வி. சம்பந்தம் அவர்கள் நன்றியுரை கூறினார்கள்.

தொண்டை நாட்டுத் தலயாத்திரை : தருமபுர ஆதீனப் பிரசார நிலையத்தின் சார்பில் நடைபெறும் மாதாந்தர வழி பாட்டுக்கூட்டம் திருப்பாசூரில் 20-9-59 மாலை வாசிசுவரர் கோயிலில் நடைபெற்றது. வழிபாட்டின்பின் ஸ்ரீ. சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தலைமையில் கூட்டம் கூடியது. திருப்பாசூர் ஊராண்மைக்கழகத்தினர் வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தனர். சங்கீத பூஷணம் திரு. பி. சுவாமிநாதன் குழுவினர் தேவார இன்னிசை நிகழ்த்தினர். திருவாளர்கள் ச. சிவகுமாரன் எம்.ஏ., புலவர் முருகவேள் எம்.ஏ.,எம்.ஓ எல், வே. நடராஜன் B. Sc. (Hons), கயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார், யாழ்ப்பாணம் ஆசிரியர்-கணபதி, ஜி. கலியாணம் எம். ஏ., திருமதி. பாப்பாத்தியம்மாள் முதலியவர்கள் சொற்பொழிவு ஆற்றினர்கள். கைவண்டூர் திரு. இராஜு முதலியாரவர்கள், சிற்றுண்டி, இரவு உணவு இவைகளை வந்திருந்தோர்க்களித்தனர். கோயில் தருமகருத்தர்கள் கூட்டம் நடத்துவதற்கு ஒலி பெருக்கி முதலியன அமைத்துச் சிறந்த முறையில் ஏற்பாடுகள் செய்திருந்தமை மிகவும் பாராட்டற்குரியது.

ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் விழா : திருச்சிற்றம்பலம் காந்தி வித்தியாலயத்தின் ஆதரவில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தினம் 14-8-59 அன்று திருச்சிற்றம்பலம் நடனபுரீஸ்வரர் ஆலயத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. உள்ளூர்வாசிகளும், காந்தி வித்தியாலய ஆசிரியர், மாணக்கர் நூற்றுக்கு மேற்பட்டோரும் கூடியிருந்தார்கள். சுந்தரமூர்த்தி, நடராஜப்பெருமான் சந்நிதியில் அன்று காலை தொடங்கி, இரவு 9 மணி வரையில் சுந்தரர் தேவாரம் முழுமையும் பாராயணம் செய்தார்கள். சுமார் நூறு பாடல்களை இசையோடு பாராயணம் செய்தார்கள். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி ஆசிரியர் ஸ்ரீ சுந்தரமூர்த்தி அவர்கள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் சரித்திரம், தேவாரம் பற்றி விரிவான சொற்பொழி வாற்றினர்கள். அன்று நால்வருக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடத்திப் பிரசாதங்களும் வினியோகிக்கப்பட்டன.

மாணிக்க வாசக சுவாமிகள் தினம்: திருச்சிற்றம்பலம் காந்தி வித்தியாலயத்தின் மாணிக்கவாசக சுவாமிகள் தினம் 9-7-59 அன்று திருச்சிற்றம்பலம் நடனபுரீஸ்வரர் ஆலயத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. உள்ளூர் வாசிகளும், காந்தி வித்தியாலய ஆசிரியர், மாணாக்கரும் நூற்றுக்கு மேற்பட்டோர் கூடியிருந்தார்கள். எல்லோருமாகத் திருவாசகம் முழுமையும் மாணிக்கவாசகர் நடராஜப் பெருமான் சந்நிதியில் பாராயணம் செய்தார்கள். குறிப்பாக, நூறு பாடல்களை இசையோடு பாடினார்கள். அன்று நால்வருக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடத்திப் பிரசாதங்களும் விநியோகிக்கப்பட்டன.

சமாஜ ஆண்டு விழா: 27-9-59 ஞாயிறன்று ஸ்ரீ பால சுப்பிரமணிய பக்தஜன சபையில் கூடிய சமாஜ நிர்வாக சபைக் கூட்டம், இவ்வாண்டு சமாஜ மகாநாட்டைக் காஞ்சிபுரத்தில் நடத்துவதெனத் தீர்மானித்தது.

---

## சான்றோர் திருநட்சத்திரங்கள்

### ஐப்பசி மாதம்

8உ (25-10-1959) ஞாயிற்றுக்கிழமை – சத்திநாயனார்—பூச நட்சத்திரம்.

16உ (2-11—1959) திங்கட்கிழமை – பூசலார் நாயனார்—அனுஷ நட்சத்திரம்

18உ (4-11-1959) புதன்கிழமை – ஐயடிகள் காடவர்கோன் நாயனார்—மூல நட்சத்திரம்

27உ (13-11-1959) வெள்ளிக்கிழமை—ஸ்ரீ திருமூல நாயனார்—அசுவனி நட்சத்திரம்

28உ (14-11-1959) சனிக்கிழமை நின்றசீர் நெடுமாற நாயனார்—பரணிநட்சத்திரம்.

29உ (15-11-1959) ஞாயிற்றுக்கிழமை—இடங்கழி நாயனார்—கிருத்திகை நட்சத்திரம்

### சந்தானகுரவர்

15உ (1-11-1959) ஞாயிற்றுக்கிழமை – மெய்கண்ட சிவாசாரியர்—சுவாதி.

## புத்தக விலைப்பட்டி

| | | ரூ. | ந.பை |
|---|---|---|---|
| பெரியபுராணம் | ... | 3 | 00 |
| திருப்போரூர்ச் சந்நிதிமுறை | ... | 0 | 75 |
| திருவெம்பாவை - திருப்பள்ளியெழுச்சி - சமாஜப் பொன்விழா வெளியீடு | ... | 1 | 00 |
| சமாஜப் பொன்விழா மலர் | ... | 0 | 50 |
| முருகன் முந்நூல் உரையுடன் | ... | 0 | 40 |
| ஞானியார் அடிகள் நினைவு மலர் | ... | 2 | 00 |
| சிவஞான போதம் (எளிய உரை) | ... | 0 | 12 |
| குகார்ச்சனைத் திருமந்திரம் | ... | 0 | 06 |
| அறுபத்துமூவர் | ... | 0 | 06 |
| தபாற்கூலி, பதிவுச் செலவு வேறு. | | | |
| திருவெம்பாவை திருப்பள்ளியெழுச்சி(உரையுடன்) | | 0 | 05 |
| ,, நூறு பிரதிகள் பதிவுத் தபாற்கூலியுள்பட | | 6 | 25 |

**சைவ சித்தாந்த மகா சமாஜப் புத்தக விற்பனை அலுவலகம்,**
28, இராமகிருஷ்ண மடத்துச் சாலை, மயிலாப்பூர், சென்னை-4.

---

**பாம்பன் - ஸ்ரீமத். குமரகுருதாச சுவாமிகள்**
**அருளிய நூல்கள்**

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| நாலாயிரப் பிரபந்த விசாரம் | ... | 1 | 0 |
| சுப்பிரமணியத்தைக் குறித்த வியாசம் | ... | 1 | 8 |
| சிவஞான தீபம் | ... | 0 | 8 |
| செவியறிவுறூஉ | ... | 0 | 3 |
| சைவ சமய சரபம் | ... | 2 | 8 |

கிடைக்குமிடங்கள் : (தபாற் கூலி வேறு)

(1) பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1

(2) சமாஜப் புத்தக விற்பனை அலுவலகம்,
28, இராமகிருஷ்ண மடத்துச் சாலை, சென்னை-4

---

Printed at the Sadhu Press, 15, Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.